காற்றே கடவுள் ! அருட்பெருஞ்ஜோதியே ஆண்டவர்!!

# சித்தர் செயல்

# Siddhar Seyal

மக்கள் நல மாத இதழ்

TAMIL - ENGLISH MONTHLY

சித்தர் 28 மார்ச் 2003 செயல் 6



(இ.வ.) பசிப்பிணி மருத்துவர் பிர்மானந்தசாமி, ஆசிரியர் சித்த மருத்துவ காவலர் மரு.ஆனந்தகுமார்.



ஆசிரியர். ஏ.ஜி. கணபதி அடிகள்

ஆண்டு சந்தா உருபா – 70 தனிப்பிரதி 700 காசு

18.1.2003 அன்று வடலூரில் நடைபெற்ற வெள்ளிவிழா மாநாட்டில் மாநாட்டுச் செயலாளர் மரு. தியாகி பதஞ்சலி வரவேற்புரை நிகழ்த்துகிறார்.

தமிழ்மாநில சித்த வைத்திய சங்க பொதுச் செயலாளர் மரு. எம். பாஸ்கரன் [illegible] அவர்கள் பொன்னாடை போர்த்துகிறார்கள்.

ஒன்றே குலம் ஒருவனே தேவன்!
அத்தேவன் காற்றே காண்!!

மருந்தகம் : 8530711
அகம் : 8585475
வடலூர் : 359705

காற்றே கடவுள்! அருட்பெருஞ்ஜோதியே ஆண்டவர்!!

# சித்தர் செயல்



# Siddhar Seyal

Tamil - English Monthly

ஆசிரியர் : சிவானந்தஜி கணபதி அடிகள்

துணை ஆசிரியர் மரு. எம்.பாஸ்கரன் HPSM

சித்தர் 28 மார்ச் 2003 செயல் 6

# சித்தா வளருவதற்கு தொழில்நுட்ப இணைப்புத்தேவை

## அப்துல் கலாம் அழைப்பு

மருத்துவ சிகிச்சை குறித்து பரம்பரை பரம்பரையாக நம்முன்னோர்கள் அறிந்து வைத்துள்ள விஷயங்களையும் நவீன தொழில் நுட்பத்தையும் இணைத் தால் உலக மூலிகை மார்க்கெட்டில் இந்தியா முன்னணியில் இருக்கலாம் என்று குடியரசுத் தலைவர் அப்துல் கலாம் கூறினார்.

பரம்பரை பரம்பரையாக நமது முன்னோர்கள் தெரிந்துவைத்துள்ள விஷயங்களை நாம் ஒதுக்கி விடக் கூடாது என்றும் அவர் கூறினார்.

மூலிகை தொடர்பான 3 நாள் உலக மாநாட்டை ஹைதராபாதில் சனிக்கிழமை அவர் துவக்கி வைத்து ஆற்றிய உரை :

நம்மிடம் உள்ள மூலிகைகளை, நவீன் தொழில்நுட்பத்தை பயன் படுத்தி மதிப்பு கூட்டப்பட்ட பொருளாக மாற்ற வேண்டும்.

இதற்கான வழிகளை விஞ்ஞானிகள் ஆராய வேண்டும். அப்படி செய்யாத வரை நமது விவசாயி களை ஏழ்மை நிலையி லிருந்து கை தூக்கி விட முடியாது.

இந்தியாவில் இயற்கை வளம் ஏராளம் மூலிகை சிகிச்சை குறித்த அறிவும் பரம்பரையாக இருந்து வருகிறது. அப்படி இருந்தும், உலக மூலிகை மார்க்கெட்டில் நமது பங்கு மிகவும் குறைவு. உலக மூலிகை மார்க்கெட் 6100 கோடி டாலர். இதில் இந்தியாவின் பங்கு 100 கோடி டாலரை கூட எட்ட வில்லை. ஆனால் சீனாவின் பங்கு 600 கோடி டாலர்.

மூலிகையை மதிப்பு கூட்டப் பட்ட பொருளாக மாற்றி நமது தேவைக்கும் ஏற்றுமதிக்கும் பயன் படுத்த வேண்டும்.

இவற்றுக்கான தொழில் நுட்பத் தை நாமே தேர்ந்தெடுக்க வேண்டும்.

மூலிகையை மதிப்பு கூட்டப் பட்ட பொருளாக்கி, தொழில் துறையின் உதவியுடன், அவற்றுக் கான வியாபார மார்க்கங்களையும் அறிய வேண்டும்.

அண்ணா பல்கலை பேராசிரியாக இருந்தபோது, உயரிய தொழில் நுட்ப நிபுணரின் முயற்சியையும் சித்தா டாக்டரின் முயற்சியையும் ஒருங்கி ணைத்தேன். புற்று நோயை எதிர்க்கும் மருந்தை தயாரிக்க இதன் மூலம் வழி பிறந்தது.

வளர்ந்த நாடுகள் இந்தியாவி லிருந்து மூலிகைகளை வாங்கி அதை மருந்தாக்கி நமக்கே விற்கிறது. அதுவும் காப்புரிமை செய்து கொண்டு விற்கிறது. அதிக விலையும் கொடுக்க வேண்டி யிருக்கிறது என்றார் கலாம்.

முன்னதாக முன்னாள் பிரதமர் பி.வி. நரசிம்ம ராவ் பேசினார். மூலிகை சிகிச்சை தொடர்பாக இந்தியாவில் பரம்பரை பரம் பரையாக மக்களிடம் உள்ள அறிவுக்கு காப்புரிமை பெற வேண்டும் என்றார். காடுகள் அழிக்கப்படுவதால் மூலிகைகளும் அழிந்து வருகின்றன. இது தடுக்கப்பட வேண்டும் என்று கூறினார்.

# உலக க்ஷேமம் அறக்கட்டளை

(பதிவு பெற்றது)

## வேண்டுகோள்

சித்தர் மார்க்க மரபினர்களே ! வணக்கம்.

எல்லா உயிர்களும் இன்புற்று வாழ வேண்டும் என்ற வள்ளாரின் வாக்குப்படி இன்று உலகம் பூராவும் சன்மார்க்கக் கொள்கை பரவி வருகிறது என்பது எல்லோரும் அறிந்ததே, சாதியும், மதமும் பொய் என ஆதியில் உணர்த்திய அருட்பெருஞ்சோதி என்று வள்ளார் அருளியது போல் இன்று உலகெங்கும் மதக் கலவரங்கள் தோன்றி மக்கள் அழிந்துக்கொண்டிருக்கிறார்கள். இவ்வழியின் முடிவில்தான் மக்கள் ஜாதி மத பேத மற்று வாழ்வார்கள். அச்சன்மார்க்க காலம் அண்மையில் வடலூரில் இருந்து செயல்பட இருக்கின்றது.

வடலூரில் ஞானசபை அமைத்த வள்ளலார், பசிப்பிணி தீர்க்க தர்மச்சாலை அமைத்தார்கள். உடற்பிணி தீர்க்க வைத்தியசாலை அமைக்க வேண்டுமென்று விரும்பினார்கள். அவர்கள் விருப்பம் போல் வடலூரில் கடந்த இருபது மாதங்களாக வள்ளலார் வைத்திய சாலை எனும் பெயரில் ஒரு இலவச வைத்தியசாலையை உலகக் க்ஷேமம் அறக்கட்டளை வெற்றிகரமாக பல வைத்தியர்களின் உதவியுடன் நடந்து வருகிறது. இவ் வைத்திய சாலைக்கு ஒரு கட்டடம் தேவை என முடிவெடுக் கப்பட்டது.

இம்முடிவை ஏற்றுக் கொண்டு அறக்கட்டளையின் அறங்காவலரான சென்னை-600 028, 4 முதல் டிரஸ்ட் லிங்க் தெரு, பிளாட் எண்.5பிரணவ் இல்லத்தில் வசிக்கும் கருணை மிகு யு. ஆரோக்கிய ராஜ் அவர்கள் ரூபாய் ஒரு இலட்சம் (ரூ.10,0000) நன்கொடையாக வழங்கியுள்ளார்கள். இரண்டாவது தவணையாக ரூபாய் ஒன்றரை லட்சம் (ரூபாய் 1,50,000/–) வழங்கியுள்ளார்கள். நன்றியுடன் உலகக்ஷேமம் பெற்றுக்கொண்டது.

இதை கண்ணும் தாங்களும் தயவுசெய்து தங்களால் இயன்ற நன்கொடையை கீழ்கண்ட முகவரியில் அளித்து உதவிட அன்போடு வேண்டிக் கேட்டுக் கொள்கிறோம்.

இங்ஙனம்

**ஏ.ஜி. கணபதி அடிகள்**

நிறுவனர் மற்றும் நிர்வாக அறங்காவலர்

**141, அருணாசலம் தெரு,**

**சிந்தாதிரிப்பேட்டை, சென்னை– 2.**

# அன்புவேண்டுகோள்

**அன்புளங்கொண்ட வாசக பெருமக்களே !**

வணக்கம்.

கடந்த 28 ஆண்டுகளாக பெரும் பொருள் இழப்பிற்கிடையே நடைபெற்று வந்த ''சித்தர் செயல்'' மக்கள் நல மாத இதழ் வரும் 2003, ஏப்ரல் மாதம் முதல் **உலகக்ஷேமம் அறக்கட்டளையின்** வெளியீடாக வெளி வருவதற்கான ஏற்பாடுகள் நடைபெற்று வருகின்றன.

இதுவரை ஏற்பட்ட பொருள் இழப்பு உலகக்ஷேமம் அறக்கட்டளைக்கும் ஏற்படாமலிருக்க வேண்டுமென்ற எண்ணத்தால் தவிர்க்கமுடியாத சூழ்நிலையில் தனி இதழ் ரூபாய் பத்து (ரூ.10) என்றும் ஆண்டு சந்தா நூறு ரூபாய் (ரூ.100.00) என்றும் தீர்மானிக்கப்பட்டுள்ளது. தாங்கள் சித்தர் செயலுக்கு செலுத்தும் சந்தா சித்தர் செயல் வளர்ச்சிக்கு உதவுவதுடன் பலதர்ம காரியங்களுக்கும் பயன்பட இருக்கின்றது என்பதை தெரிவித்துக் கொள்கிறோம். எனவே தயவு செய்து தங்கள் சந்தாவை அனுப்பி வைத்து ஆதரவு அளித்திட வேண்டுகிறோம்.

இங்ஙனம்

**''சித்தர் செயல்'' ஆசிரியர் ஏ.ஜி.கணபதி அடிகள்**


**சித்தர் செயல் பத்திரிகையின் உரிமை விளக்க அறிவிக்கை**

**படிவம் 4 (8வது விதி காண்க)**

| | | | |
|---|---|---|---|
| 1. | வெளியாகும் இடம் | : | 141, அருணாசலம் தெரு, சிந்தாதிரிப்பேட்டை, சென்னை – 600 002. |
| 2. | வெளியாகும் காலம் | : | மாதம் ஒரு முறை |
| 3. | அச்சடிப்பவர் | : | சே.சி. ராஜகுமார் |
| | இனம் | : | தமிழர் |
| | முகவரி | : | இமேஜ் ஆப்செட் பிரிண்டர்ஸ் சென்னை – 600 002. |
| 4. | பதிப்பாளர் பெயர் | : | ஏ.ஜி. கணபதிஅடிகள் |
| | இனம் | : | தமிழர் |
| | முகவரி | : | 141, அருணாசலம் தெரு, சிந்தாதிரிப்பேட்டை, சென்னை – 600 002. |
| 5. | ஆசிரியர் பெயர் | : | ஏ.ஜி. கணபதிஅடிகள் |
| | இனம் | : | தமிழர் |
| | முகவரி | : | 141, அருணாசலம் தெரு, சிந்தாதிரிப்பேட்டை, சென்னை – 600 002. |
| 6. | ஒரு விழுக்காட்டிற்குமேல் முதலீடு செய்யப்பட்டுள்ள பத்திரிகை உரிமையாளரும் கூட்டாளிகளும், பெயரும் முகவரியும் | : | ஏ.ஜி. கணபதிஅடிகள் 141, அருணாசலம் தெரு, சிந்தாதிரிப்பேட்டை, சென்னை – 600 002. |

நான் இதன் மூலம் மேலே காணப்படும் விவரங்கள் யாவும் எனக்குத் தெரிந்த வரை முற்றிலும் உண்மையென நம்பகமாக அறிவிக்கிறேன்.

நாள் : 1.3.2003

...ம் : சென்னை – 600 002.

(ஒப்பம்) ஏ.ஜி. கணபதி

வெளியிடுபவர் கையொப்பம்



# இந்திய மூலிகைக் களஞ்சியம் !



வேதி – முதல் பொது நூலக இயக்குநர், ஓய்வு – கம்பம்

**1. பல்லக்கு வயித்தியர் :**

இன்றைக்கு (06.12.2002)க்கு சரியாக முந்நூற்று இருபத்தைந்து ஆண்டுகளுக்கு முன் ஒரு நாள் ! கொச்சி டச்சு ஆளுநர் மாளிகை வாசல்! யாரையோ எதிர்பார்த்து வாசலில் பரபரப்பு !

பல்லக்கில் வந்து இறங்கினார், கொச்சிசேர்தலய் கொடக்காரப் பள்ளி ஈழவர் இட்டி அச்சுதன் வயித்தியர்; கை நிறைய மூலிகைக் கொத்துக்கள்; வாய் நிறைய மந்திர உச்சாடனம்!

அவர் மாளிகைக்குள் நுழைந்தார். கூடவே தல வயித்தியர் அப்புப்பட், அரங்கப்பட், விநாயகப்பட், உதவியர், ஆளுநர் முதலியோர் அந்தப்புரம் அணுகினர்.

குடல்வால் அழற்சியால் அல்லற்பட்டுக்கொண்டிருந்த ஆளுநரின் மனைவியைப் பரிவுடன் பரிசோதித்தார். ஏதோ சில கேள்விகள் கேட்டுச் சிந்தனை வயப்பட்டார்.

அடுத்த ஒரு நாளிகைக்கு கலுவம் (குழி அம்மி) கட கடத்தது. மூக்கைத் துளைக்கும் வாசனை வந்தது. மூலிகைச் சாறை மூன்று மிடறுகள் குடிக்கச் செய்தார். வலிமிகுந்த இடத்திலும் தடவச் செய்தார்; மூலிகைக் கொத்தால் விசிறி விட்டார்.

அடுத்த ஒரு நாழிகையில் முனகல் குறைந்து கண் விழித்தார் அம்மையார். வாட்டம் குறைந்தது போலும். கடைக் கண்ணால் கணவரைக் கவனித்தார். வயித்தியர்களை வாழ்த்தினார்.

மூன்று நாள் சிகிச்சையில் முழுக்குணம் பெற்றார் ஆளுநர் மனைவி. ஆளுநர் அகம் மகிழ்ந்தார். அப்புறம்?

**2. கலந்தாலோசிப்பு :**

காட்டுப்பரவு மூலிகைகள் கொண்டு, சின்ன இடத்து வயித்தியர்கள் பெரிய இடத்து நோயாளிக்கு வயித்தியம் செய்து வாழ்த்துப் பெற்றனர்.

தாம் பெற்ற திருப்தியை எல்லோரும் பெற வேண்டும் என்று எண்ணினார் ஆளுநர். வயித்தியத்தின் மூலத்தையும் சூட்சமத்தையும் விசாரித்தார். அவர்கள் கூறியதாவது:

'இந்த வயித்தியம் ஆதி காலம் தொட்டு வருகிறது. வயித்தியக் குடும்பத்தினர் வாய் மொழியாக வாழ வைத்தனர். பின்பு ஏடுகளிலும் எழுதி வைத்தனர்'.

'ஒரு மூலிகையின் பெயரைச் சொன்னால், அதன் சமூகத்தைப் பற்றி வேர், தண்டு, கிளை, கொம்பு, இலை, பூ, காய், கனி, விதை முதலியன பற்றி, அதன் பயன்பாடு

பற்றியும், நோய் தீர்வுபற்றியும் பாடல்களாகப் பறைந்து வைத்தனர்'.

'ஒரு நோயைச் சொன்னால், அதன் மூலகாரணத்தைப் பற்றியும், நோய்வகை பற்றியும், நோயாளி முறைப்பற்றியும் நோய் தீர்க்கும் முறைப்பற்றியும் சூத்திரங்களாகச் சொல்லி வைத்தனர்.

'இவை திட்டமிட்டு வளர்க்கப் படவில்லை. அருகிய சில வயித்தியர்களால், ஈழவ அச்சுதன் கொங்கனி அப்புபட் போன்றவர் களால் வாழ்ந்து வருகிறது. ஆனால் இவர்களுக்கு வசதியாய் வாழும் வகை, வருமானம் இல்லை.

ஆளுநர் இவைகளை எல் லாம் கேட்டு, விசாரித்து அறிந்த பின்னர் மூலிகை வயித்தியத் தைத் திட்டமிட்டு வளர்க்க முனைந்தார். வயித்தியர் களின் தலமக்களின் ஒத்துழைப்புப் பெற்றார் விளைவு?

**3. மூலிகைப் பண்ணை:**

கொச்சிக்கருகில் வளமான இடத்தில் மூலிகைப் பண்ணை தொடங்கப்பட்டது. அரசாங்க ஆதரவால் வாய்மொழி, ஏட்டு மொழிப் பிரசாரம் வயித்தியர் களின் வழி காட்டுதலில் மூலிகைகள் வளர்க்கப்பட்டன.

மூலிகையின் குணங்கள் தல மக்களுக்குக் கொடுத்துச் சரிபார்க்கப் பட்டன. ஆளுநர் பரிவாரங்கள் சிலரும் பயன்பட்டனர். மேலை நாட்டினர்களும், கீழ் நாட்டினரின் ிகை வயித்தியத்தால் நோய் நீங்கப் பெற்றனர். அப்புறம்?

**4. மூலிகைக் களஞ்சியம் :**

முதலில் தேர்ந்து எடுக்கப் பட்ட மூலிகைகளின் அமைப்பை வேர், தண்டு, கிளை, கொம்பு, இலை, மலர், காய், கனி, விதை முதலியவைகளின் அமைப்பை இயற்கை வண்ணத்தில் வரையச் செய்தனர். அதன் வண்ணங்கள் கூட மூலிகைச் சாறால் பளபளப்புப் பெற்றன. இவை நூலின் முதல் பக்கத்தில் பதியப் பட்டன.

ஒவ்வொரு தாவரத்தின் பயன்பாடுகளும் இட்டி அச்சுதனும் பட்டுகளும் பிறரும் பறைந்தபடி தேவநகரி எழுத்தில் கொங்கணி மொழியிலும் மலையாள மொழி யிலும் எடுத்துரைக்கப் பட்டன. இவை இரண்டாம் பக்கத்தில் இடம் பெற்றன.

இமானுவேல் கார்னரியோ உதவியால் கொங்கணி, மலையா ளப் பெயர்கள் போர்ச்சுகீசிய மொழியில் மொழி மாற்றம் பெற்றன. இவை மூன்றாம் பக்கச் செய்திகளாயின.

மேலை நாட்டாரும் இவற்றின் பயன்களைப் படித்துத் தெரிந்து கொள்ளும் வகையில் அப்போதையத் தொடர்பு மொழி யான இலத்தீன் மொழியிலும் மாற்றம் பெற்றன.

இப்படித் தயாரான கையெழுத்துப் பிரதியான செய்திகள், 794 செப்புப் பாளங்களாக வடிவமைக்கப்பட்டன. இவை ஒவ்வொன்றும் - செ.மீ. நீளமும் - செமீ. அகலமும் கொண்டிருந்தன. இவையும்

எளிதில் அச்சிட்டு, பாகங் களாகப் பிரித்து அமைக்கப் பட்டன. இப்படித் தயார் செய்யப் பெரும் பொருள் செலவிடப்பட்டது. 16 ஆண்டுகள் தொடர் முயற்சிகள் நடந்தேறின.

இவைகளை அச்சிட்ட மலபார் தீவில், இந்தியாவில் வசதிகள் இல்லை அப்போது. எனவே கையெழுத்துப் பிரதிகளும் செப்புப்பாளங்களும் பத்திரமாகக் கட்டப்பட்டு அரசாங்க ஆவணங் களாக நெதர்லாந்தின் தலை நகரான ஆம்சுடர்டாம் நகருக்குப் பயணமாயின!

**5. அச்சடிப்பு :**

இப்படிப் பயணம் வந்த ஆவணங்கள் அரசாங்க மேற்பார்வை யால் ஆம்சுடர்டாமில் அச்சாயின. முதல்தொகுதி 1678இல் வெளி யானது. பிற தொகுதிகள் ஒவ்வொன்றும் அச்சாகின படிப் படியாக. பன்னிரண்டாவது தொகுதி 1703 இல் வெளியானது.

இதில் கொச்சி வயித்தியர் கள் கொடுத்த தேவநாகரி எழுத்தி லான கொங்கணி மொழிக் குறிப்புகள் – ஆளுநரிடம் கொடுத்த குறிப்புகள் முன்னுரை யாக இடம் பெற்றுள்ளன.

**6. விளக்கம் :**

இந்த நூலின் குறிப்புகள் தொடர்பாகச் சில குறிப்புகள். யாவை அவை?

மேனாட்டார் முதலில் இந்தியாவின் மேற்குக் கடற்கரையில் தான் தொடர்பு பெற்றனர். இதை இந்தியர் என்றும் மலபார் என்றும் அவரவர் தொடர்புக் கேற்பப் பெயரிட்டனர்.

மேற்குக் கடற்கரையில் அப்போது படித்தவர்களாக ஆதிக்கம் கண்டவர்கள் சமற் கிருத மொழியைத் தேவநாகரி எழுத்தில் எழுதி வந்தனர். கொங்கணி போன்ற பிற மொழி களையும் தேவநாகரி எழுத்தி லேயே எழுதிப் பரப்பி வந்தனர். அப்போது தேவநாகரி எழுத்தே தொடர்பு மொழியாகப் பிராமண மொழியாகக் (Lingua Franca / Brahmanica) கருதப்பட்டு, பேசப் பட்டு, எழுதப்பட்டு வந்தது என்பதைப் புரிந்து கொள்ள வேண்டும்.

**7. நூல் பெயர் :**

இந்தப் பின்னணியில் உரு வாகி அச்சாகிய மூலிகைக் களஞ்சியத்தின் பெயர் என்ன தெரியுமா? அதுதான்.

ஹார்ட்ஸ் இண்டிஸ் மலபாரிகஸ்

இப்படி 325 ஆண்டுகளுக்கு முந்திய பழமையான பயன் மிக்க நூலின்பிரதிகள் எங்கு கிடைக்கும்? எப்படி பெறலாம்?

**8. கிடைப்பு :**

நெதர்லாந்து நாட்டின் தலை நகரான ஆம்சுடர்டாமில் அருங் காட்சியகத்தில் பாதுகாப்பாக வைக்கப்பட்டு உள்ளன. ஆட்சி யரின் அனுமதியில் வெளிநாட்டு யாத்ரிகர்கள் பார்த்து மகிழ்கின்றனர். ஆச்சரியப் படுகின்றனர்.

1869இல் தொடங்கப்பட்ட சென்னை கன்னிமாரா (மாநில

மைய) நூலகத்திலும் பார்க்கலாம். பயன் பெறலாம்.

திருவனந்தபுரம் மன்னர் அவிட்ட திருநாள் நூலகத்திலும் இந்நூலின் தொகுதிகள் உள்ளன. தொல் பொருளாய்வுத் துறை இயக்குநர் அனுமதியுடன் பார்க்கலாம்; பயன்படுத்தலாம் என்கிறது 06.12.1978 நாளிட்ட சென்னை இந்து நாளிதழ்.

இந்நூல் குறிப்புப் பற்றி கொங்கணி பாஷா பிரசார சபா வின் கவுரச் செயலர் புருசோத்தம மல்லய்யாவின் குறிப்பை 1979 சனவரி 19 நாளிட்ட சென்னை இந்து நாளிதழில் காணலாம்.

மேல் விவரம் தெரிந்தவர் கள் எழுத்து ஐரயாளருக்குத் தெரிவிக் கலாம்.

**9. வேண்டுகோள் :**

மூலிகைக் களஞ்சியத்தில் முடங்கிக் கிடக்கும் செய்திகள் மீண்டும் முளை விடுவது போலத் தெரிகிறது. எப்படி?

'பூனைக் காலி மூலிகையின் ஒரு விதையை நட்டால், அது ஒரு ஏக்கர் பரப்பிலுள்ள நச்சுப் பார்த்தீனியச்செடியைக் காலப் போக்கில் அழித்துவிடும்!'

'மானாவாரி நிலங்களில் தானாகவே வளரும் கோரைப் புல், சிறுநீரகத்தில் உருவாகும் கற்களைக் கரைக்கும் வல்லமை கொண்டது!'

'கீரைகளில் 70 வகைகள் உள்ளன. இதில் 10 வகைகளையே நாம் பயன்படுத்துகிறோம். தவசிக் கீரையில் 7வகை இரும்புச் சத்துகளும் 3 வகை விட்டமின் சத்துகளும் உள்ளன!'

'மக்களின் 27 வகை நட்சத்திரங் களுக்கும் தொடர்பு உள்ள 27 வகை மூலிகைகள் உள்ளன. பரணி நட்சத்திரத்தில் பிறந்தவர் களுக்கு சி விட்டமின் குறைவாக இருக்கும்!'

'சீனாவிற்கு அடுத்தபடியாக, இந்தியாவில் 8 ஆயிரம் வகை மூலிகைகள் உள்ளன. இதில் 460 வகை மூலிகைகள் பெரியகுளம் தோட்டக்கலைக் கலைக் கல்லூரி யில் பயிரிடப்பட்டு வருகின்றன!'

2002 நவம்பர் 21இல் கம்பம் புதுப்பட்டியில் நடந்த கருத் தரங்கில் தோட்டக்கலைக் கல்லூரிப் பேராசியர் இராசாங்கம் இந்தச் செய்திகளைச் செப்பியுள்ளார். விவரங்களை தினமலர், மதுரை 21.11.02 நாளிதழில் நன்கு படிக்கலாம்!

இதிலிருந்து புரிவது என்ன! மூலிகைப் பாரம்பரியமிக்கவர் கள் நாம். மூலிகை ஆர்வலர்கள் சித்த, ஆயூர்வேத, யூனானி வயித்தியர்கள், அச்சுக் கலைஞர் கள், நூலகர்கள் முதலியோர் ஒருவருக்கொருவர் தொடர்பு கொண்டு ஆராய்ச்சிகள் செய்தால் பட்டங்கள் பெறலாம், பதவிகள் பெறலாம். முயல்வோமா!

நன்றி
தமிழ் மூவேந்தர் முரசு

❖❖

# பாதுகாப்பு

## செய்யக் கூடியவை மற்றும் செய்யக் கூடாதவை

I. வீட்டில் பாதுகாப்பு

கீழ்க்கண்டவை உங்கள் வீட்டை பாதுகாப்புடையதாக்கும்.

* பால்கனிகள், பெரிய ஜன்னல்கள் மற்றும் படிகட்டுகளில் பாதுகாப்பிற்கு தடுப்புகள் மற்றும் சுவர்களை அமைக்கவும்.
* பாதுகாப்பான மின்சார இணைப்புகள் மற்றும் மின்கம்பிகளை பயன்படுத்தவும்.
* கம்பளம் மற்றும் கழிவறையின் தரை விரிப்புகளின் பின்புறம் வழுக்காதவாறு அமைக்கவும் மற்றும் தளத்தினையும் வழுக்காத வாறு அமைக்கவும்.
* நெருப்பினை அணைக்க உதவும் பொருட்களை கண்களில் படக்கூடியவாறு வைக்கவும்.
* சூடுநீர் மற்றும் கேஸ் முதலியவற்றின் பாதுகாப்பினை உறுதி செய்து கொள்ளவும்.
* விளையாட்டு சாமான்களை தரையில் வைத்துவிடுவதன் மூலம் நம் கால்களை தடுக்கிவிடும்.
* ஏணிகளை உபயோகிக்கும் பொழுது சரியாக பயன்படுத்துவதுடன், நாற்காலி, மேஜை முதலியவற்றின் மீது நிற்பதைத் தவிர்க்கவும்.
* காகிதபை, மாத்திரைகள், பூச்சிக் கொல்லி, உயிர்க் கொல்லிகள், கூர்மையான பொருட்கள், மின்சாரப் பொருட்களை பாதுகாப்பாக வைக்கவும்.
* சமையலறையில் சூடாக சமைத்த பொருட்கள் சிந்தாதவாறும், சூடான பாத்திரங்கள் தண்ணீர் முதலியவற்றையும் பாதுகாப்பாக பயன்படுத்தவும்.
* படுக்கையில் புகைபிடித்தல் மற்றும் புகையை அணைக்காதவாறு விடுதல் முதலியவை செய்யக் கூடாது.
* நீச்சல் குளத்தில் அவற்றிற்கான பாதுகாப்பை அனுசரிக்கவும்.
* துப்பாக்கி முதலியவைகளை பாதுகாப்புடன் பிரித்து குழந்தைகளின் கைகளுக்கு எட்டாதவாறு வைக்கவும்.

❋ தீக்குச்சிகளை குழந்தைகளிடமிருந்து விலக்கி வைக்கவும்.

❋ குளியலறையில் குழந்தைகளையும், வயதானவர்களையும் பார்வையிடவும், முக்கியமாக அவர்கள் குளியல் தொட்டி மற்றும் சுடுநீரை உபயோகிக்கும் போது கவனித்துக் கொள்ளவும்.

❋ தீயணைப்புப் படை, ஆம்புலன்ஸ், மருத்துவர் மற்றும் போலீசாரின் அவசரப்பிரிவு தொலைபேசி எண்களை கையிருப்பில் வைத்துக் கொள்ளவும்.

## II. வேலை செய்யுமிடத்தில் பாதுகாப்பு

- சட்டப்படி தேவைப்படும் பாதுகாப்பு அனைத்தையும் அறிந்து செயல்படுத்துவதே வேலையில் பாதுகாப்பிற்கான வழி.
- அத்துடன் உங்கள் அலுவலகத்திற்கான குறிப்பிட்ட பாதுகாப்பினையும் ஏற்படுத்தி அவற்றை பின்பற்றுங்கள்.
- உங்கள் அலுவலகத்தின் பாதுகாப்பு - பயிற்சிகளை அடிக்கடி மேற்கொண்டு உங்கள் வேலையில் பாதுகாப்பின்மையால் ஏற்படும் அபாயங்களை அறிந்து கொள்ளுங்கள்.
- பின்குறிப்பிட்டுள்ள பாதுகாப்பின்மையால் ஏற்படும் அபாயங்கள் உங்கள் வேலைக்கு பொருந்துமாயின் அதிக கவனம் அளியுங்கள்.
- மிஷின் மற்றும் அப்பொருட்களால் ஏற்படும் அபாயம்.
- நடைபாதைகள், வழப்வழப்பான பகுதிகள், சீரற்ற பாதைகள் முதலியவற்றில் தடுமாறி விழும் அபாயம், சரியான காலணி மற்றும் தலைக்கு ஹெல்மெட் அணிதல் அவசியம்.
- மூட்டை தூக்குதல் மற்றும் சரியாக உட்காராததால் முதுகிற்கு ஏற்படும் அபாயம்.
- வெயிலால் ஏற்படும் அபாயம், பாதுகாப்பான உடை, குளிர்ந்த அல்லது வெப்பக் காற்று, வெப்ப நிலையினை கட்டுப்படுத்த பயன்படுத்துதல்.
- அதிக அழுத்தம், பாய்லர்கள் முதலியவற்றின் அபாயம்.
- மின்சாரத்தினால் ஏற்படும் அபாயம்; அவற்றை அடையாளம் காணல், பாதுகாத்தல் கையாளுதல், அவற்றை வெளியேற்றுதல்.
- வெடி அபாயத்தினைக் குறைத்தல்; அந்தப் பகுதியில் புகைப் பிடித்தலை தவிர்த்தல், மின்சார பொறியினை தவிர்த்தல், சரியான காற்றோட்டம்.

- கதிர்வீச்சின் அபாயத்தைக் குறைத்தல்; தனிப்பட்ட அளவைகளை உபயோகித்தல், கதிர்வீச்சு பகுதிகளை குறித்தல், சரியான பாதுகாப்பு, வெளியேற்றத்தை சரியாக செய்தல்.
- ஒலியினால் ஏற்படக்கூடிய அபாயத்தினை தவிர்த்தல், சத்தத்தின் அளவுகளை கணக்கிடுதல், மற்றும் காதின் கேட்கும் திறனிற்கான பரிசோதனைகள் செய்தல்.
- மற்றும் பல

## III. பயணம் செய்யும் வாகனம் பாதுகாப்பு

- வாகனத்தினை ஓட்டும் பொழுது முழுக் கவனத்தினையும் செலுத்தவும்.
- எல்லா போக்குவரத்து விதிகள் மற்றும் போக்குவரத்து அடையாளத்தையும் பின்பற்றவும்.
- பாதுகாப்பான வேகத்தில் செல்லவும்.
- மாத்திரை சாப்பிடும் பொழுதோ அல்லது மது அருந்தியிருக்கும் பொழுதோ வாகனம் ஓட்டாதீர்.
- ஓய்வில்லாது தொடர்ந்து நெடுந்தூரம் ஓட்ட வேண்டாம்.
- பாதுகாப்பு வளையங்களை அணிந்து கொள்ளவும்.
- நன்றாக பார்த்துக் கொண்டு காரை மெதுவாக பின்புறத்தில் செல்லவும்.
- குழந்தைகள் மற்றும் வளர்ப்புப் பிராணிகளை வெப்ப நாட்களில் பாதி ஜன்னல்கள் திறந்து வைத்தப் பின்பே காரினுள் விட்டுச் செல்லவும்.
- பாதுகாப்பு கவசம், முதலியவற்றை இரண்டு சக்கர வாகன ஓட்டிகள் பயன்படுத்தவும்.
- மற்றும் பல.

## IV. பொழுதுப் போக்கின் பொழுது பாதுகாப்பு

- பொழுதுப் போக்கு நடவடிகளின் பாதுகாப்புகளை அறியுங்கள்.
- குழந்தைகள் மற்றும் யௌவன பருவத்தினரின் உற்சாகம் பாதுகாப்பான எல்லைக்குள் இருக்கும் பொருட்டு மேற்பார்வை யினை உறுதிப்படுத்திக் கொள்ளுங்கள்.

- உயிர் காக்கும் செயல் என குழந்தைகளுக்கு நீச்சல் கற்றுக் கொடுங்கள்.
- பீச்சினை உயிர்காக்கும் வேலையில் இருப்பவரின் துணையுடன் மகிழுங்கள்.
- திறந்த வெளியில் தண்ணீரில் இருக்கும் பொழுது ஒரு கூட்டத்துடன் இருக்கவும்.
- ஆழ்நிலை நீரின் வேகம் மற்றும் பாறைகளில் கவனமாக இருங்கள்.
- ஆராய்ச்சி செய்யப்படாத நீரில் செல்ல வேண்டாம்.
- படகில் சென்றால் உயிர் காக்கும் ஜாக்கெட்டுகளை அணியவும்.
- காற்று அழுத்த மண்டலத்தின் தன்மையின் கவனம் கொள்ளுங்கள்.
- உங்களின் பயண நிலவரத்தினை எல்லை காப்பாளருக்கும் மற்றவர்களுக்கும் அறிவியுங்கள்.
- ''ஹைக்கிங்'' செல்ல வேண்டுமாயின் ஓர் அனுபவஸ்தரின் துணையுடன் செல்லவும்.
- வெயில், பனி, மழை, குளிர் முதலியவற்றிலிருந்து காப்பாற்ற தக்க உடைகளை அணியுங்கள்.
- போதுமான தண்ணீரையும், மருத்துவப் பொருட்களையும் எடுத்துச் செல்லுங்கள்.
- தொலைந்து போனால் உதவிக்காக காத்திருங்கள். சுற்றி வருதலை தவிர்த்திடுங்கள்.
- மற்றும் பல

இந்த குறிப்புகள் வெறும் ஆலோசனைகளே. இவை போதுமானவையல்ல. இவற்றுடன் மிக முக்கியமானது, பாதுகாப்புக் கான குறிக்கோளும் அவற்றின் செயல்பாடுகளுமே.

நன்றி
அப்பல்லோ மருத்துவமனை
வெளியீடு

# சித்தர் செயல் வளர்ச்சி நிதி அளித்த அன்பர்கள்

1) டாக்டர். ஆனந்த குமார் அவர்கள் — ரூ. 5000.00 (ஐந்து ஆயிரம்)
நிறுவியவர் , தலைவர்
டாக்டர் மலர்கொடி பண்டிட் எஸ்.எஸ். ஆனந்தம் நினைவு அறக்கட்டளை,
8, ராகவையா வீதி,
தியாகராய நகர், சென்னை - 600 017.

2) NAVAJOTHI ILLAM TRADINGS — ரூ. 1000.00 (ஆயிரம்)
345, Jalan PondokLabu
09000 Kulim, Kedah,
Darulaman, Malaysia

## தமிழ் மாநில சித்த வைத்திய சங்கம்

3) மரு. புலவர் விநாயகம் அவர்கள் — ரூ. 500.00
பொருளாளர்

4) மரு. வே மாணிக்கம் - — ரூ. 100.00
செயற்குழு உறுப்பினர்

5) மரு. ரேவதி - உறுப்பினர் — ரூ. 100.00

6) மரு. சர்குணதாஸ் - உறுப்பினர் — ரூ. 100.00

7) மரு. உஷா சேதுராம் - உறுப்பினர் — ரூ. 100.00

## சித்தவித்தை கற்றல் சிறப்பு!

### வெண்பா 1

சீவிலுயர் சிற்பச் சிலை வடித்துச் சாமியென்றுக்
கோவிலுள் வைத்துநிதம் கும்பிடுவோர் - நாவிழியக்
கத்தியருள் பெற்றதுண்டோ? செத்ததுண்டே: மூச்சொடுங்கும்,
சித்தவித்தை கற்றல் சிறப்பு

(சிவில் - செதுக்கில்: நாவிழிய - நாக்கிறங்க)

## வாசிபயில் முத்தரொடு ஒட்டல் ஒழுங்கு!

### வெண்பா 2

மூக்கிலே மூச்சுவிடும் மூடரையும், நாடொறும்,
வாக்கிலே வம்பளக்கும் வாயரையும் - நோக்கிலே
வெட்டிவிட்டு, எப்போதும், வாசிபயில் முத்தரொடு,
ஒட்டி இருத்தல் ஒழுங்கு.

(நோக்கு-பார்வை; வாசி - சுவாசம்; முத்தர்-வீடு; பேற்றிற்குரியர்; ஒழுங்கு - நேர்மை)

# சித்திரா பௌர்ணமி மற்றும் திரு மயிலை சிவஞான நடராஜசாமிகள் பிறந்த தின விழா அழைப்பிதழ்

அன்புடையீர்,

வருகின்ற 16.4.2003 புதன்கிழமை அன்று சித்தரபௌர்ணமி விழாவும் திருமயிலை சிவஞான நடராச சாமிகள் பிறந்தநாள் விழாவும். அறக்கட்டளையின் கல்வெட்டுதிறப்பு மற்றும் அறங்காவலர் அமரர் டி. அரங்கநாதன் அவர்களின் படத்திறப்பும் கீழ்கண்ட நிகழ்ச்சிநிரலின் படி நடைபெறும். ஆத்ம சகோதர, சகோதரிகள் அனைவரும் வருகை தந்து சிறப்பிக்குமாறு அன்போடு அழைக்கின்றோம்.

## நிகழ்ச்சி நிரல்

| | |
|---|---|
| காலம் | **16.4.2003 புதன்கிழமை** |
| இடம் | **4, செல்விஅம்மன் கோயில்திடம்**<br>பெரவள்ளூர் ரோடு, சென்னை-82. |
| காலை 7.30 | சன்மார்க்க கொடியேற்றுதல்<br>பிரம்மஸ்ரீ தாட்யாயிணி அம்மாஅவர்கள் |
| காலை 8.00 | சிற்றுண்டி வழங்குதல் |
| காலை 9.00 | அகவல் பாராயணம் |
| காலை 11.00 | அறக்கட்டளையின் கல்வெட்டு திறப்பு<br>திறப்பாளர் பிரம்மஸ்ரீ சி. கோதண்டவேலு அவர்கள்<br>(சென்னை சித்தவித்தியார்த்திகள் அபியாச நிலைய அறக்கட்டளை செயலாளர்) |
| பகல் 12.00 | கூட்டு (தவம்) ஜபம் |
| பகல் 1.00 | பசியாற்று வித்தல். |
| பிற்பகல் 3.00 | அமரர் அறங்காவலர்<br>**பிரம்மஸ்ரீ டி. அரங்கநாதன்** அவர்கள் படம் திறப்பு |

படத்திறப்பு பிரம்மஸ்ரீ **K.V.லோகநாதன்** அவர்கள் – பெங்களூர்
(ஓய்வு பல்லவன் போக்குவரத்து கழகம்)

| | |
|---|---|
| மாலை 4.30 | தேனீர் |
| மாலை 5.00 | பொதுக்கூட்டம் |
| வரவேற்புரை | **பிரம்மஸ்ரீ வே. மாணிக்கம்** |

தலைமை பிரம்மஸ்ரீ A.G.கணபதி அடிகள் அவர்கள்,

பிரம்மஸ்ரீ K.S.மணி, அவர்கள்
வடலூர் சமரச சுத்தசன்மார்க்க சத்திய சங்கம்
(உலக மையம்) ஆலலோசகர்

சன்மார்க்க புலவர் செல்வராஜ் M.A.
அருள்ஜோதி அன்னை இல்லம்,

மரு. புலவர் சத்தியநாராயணன் M.A. M.E.D.
கௌரவ ஆலோசகர் தமிழ்மாநில சித்த வைத்திய சங்கம்

பிரம்மஸ்ரீ புலவர் நம்பி சங்கம் பொருளாளர்

மரு. எம். பாஸ்கரன் பொதுச்செயலாளர்
தமிழ்மாநில சித்த வைத்திய சங்கம்

பிரம்மஸ்ரீ மரு.வேலாயுதம் திருமுல்லைவாயில்

**பிரம்மஸ்ரீ யாலதீபு** உலக மையம் ஆலோசகர்,
**பிரம்மஸ்ரீ கோவை கணேசன்,**

நன்றியுரை பிரம்மஸ்ரீ K.R. ஜானகிராமன் அவர்கள்

இங்ஙனம்

திருமயிலை சிவஞான நடராஜச சாமிகள் சித்தயோக பயிற்சி நிலையம் அறக்கட்டளை (பதிவு)

# இருபத்தாவது இலவச வைத்திய முகாம்

14.3.2003 வெள்ளிக்கிழமை கடலூர் மாவட்டம். வடலூர் பார்வதி புரம். ஞானசபை வீதியிலுள்ள மணி மாடத்தில் உலகக்ஷேமம் அறக்கட்டளையின் சார்பில் வள்ளலார் வைத்திய சாலையில் வழக்கம்போல. காலை10மணி முதல் மாலை 5மணி வரை இலவச மருத்துவ முகாம் சிறப்பாக நடைபெற்றது. இம்முகாமில் கலந்துக் கொண்டு மருந்து வழங்கியவர்கள் வருமாறு.

| | | | |
|---|---|---|---|
| 1. | மரு. ஓம்சக்தி பெருமாள் | பல்லாவரம் | தோல் வியாதி |
| 2. | மரு.G.சச்சிதாநந்தம் | செங்கல்பட்டு | காது,மூக்கு, தொண்டை |
| 3. | மரு.G.மணிவாசகம் | தேவூர் | வெள்ளை, வெட்டை |
| 4. | மரு. இராமவேதநாயகம் | காட்பாடி | ஆஸ்துமா |
| 5. | மரு.கலியபெருமாள் | சிதம்பரம் | வயிற்றுக் கோளாறு |
| 6. | மரு.A.G.தனபால் | சிதம்பரம் | பொது |
| 7. | மரு.C.தனபால் | பொன்னம்குப்பம் | மூலம் |
| 8. | மரு.R.கண்ணையன் | விருதாசலம் | வெள்ளை, வெட்டை |
| 9. | மரு.P.ராமலிங்கம் | மீன்சுருட்டி | ஆஸ்துமா |
| 10. | மரு.பாஸ்கரதாஸ் | அன்னூர் | சர்க்கரை |
| 11. | மரு. சி. மந்திரி | இரவாங்குடி | முடக்குவாதம் |
| 12. | மரு. சீ.வீரமணி | மன்னார்குடி | மதுபோதை ஒழிப்பு |
| 13. | மரு.L.பூபதி | பரங்கிப்பேட்டை | மூட்டுவலி |
| 14. | மரு. தியாகி V.K.பதஞ்சலி | சிதம்பரம் | பொது |

அடுத்த முகாம்கள் நடைபெறும் விவரம்.

| தமிழ்மாதம் | நாள் | ஆங்கிலநாள் | கிழமை | நேரம் |
|---|---|---|---|---|
| பங்குனி | 27 | 10-04-2003 | வியாழன் | 10a.m. to 5p.m. |
| சித்திரை | 25 | 8.05.2003 | வியாழன் | " |

## வேண்டுகோள்

இலவசமாக மருத்துவம் செய்ய விரும்புபவர்கள் பெயர், முகவரி, தகுதி, மற்றும் தாங்கள் சிகிச்சை செய்ய விரும்பும் நோய் ஆகியவைகள் பற்றி விரிவாக முன்கூட்டி தெரிவிக்க வேண்டும். தங்கள் கடிதம் கண்டு அதற்கு வேண்டிய இட வசதிகள் செய்து தர வசதியாக இருக்கும் என்பதை மிகப் பணிவன்புடன் தெரிவித்துக் கொள்கிறோம்.

**தேய்வு (HIV / AIDS) நோய்க்கு**

***சிறப்பு சிகிச்சையளிக்கப்படும்.***

இங்ஙனம்

**ஏ.ஜி. கணபதி அடிகள்**

***நிறுவனர் மற்றும் நிர்வாக அறங்காவலர் - உலகக்ஷேமம் அறக்கட்டளை***

***141, அருணாசலம் தெரு, சிந்தாதிரிப்பேட்டை, சென்னை - 2. ☎: 8530711***

## The Concept of Creation and Procreation - A Comparative Study of Thirumoolar's concept with Chromosome structure in Modern Medicine

**Dr. J.R. KRISHNANMOORTHY,**
Member, GB CCRAS
Member, NIS,
Member, SAC (Siddha) CCRAS

## BIOGRAPHY OF THIRUMOOLAR

'ஒன்றவன் தானே இரண்டவன் இன்னருள்
நின்றனன் மூன்றினுள் நான்குணர்ந் தான் ஐந்து
வென்றனன் ஆறு விரிந்தனன் ஏழும்பர்ச்
சென்றனன் தானிருந் தானுணர்ந் தெட்டே''

Thirumanthiram starts with this first stanza on Lord Siva and the order of creation. Thirumoolar composed Thirumanthiram. He is the direct discipline for Sri Kantarudrar, who is also known as Nandhi. Other disciples of Nandhi are Sanakar, Sananthanar, Sananthanar, Sanathkumaran, Sivayogamamuni, Pathanjali and Vyakramar. Almighty Siva delivered 28 Sivaganas and Nandhi got only 9. The nine Sivagamas were taught to Thirumoolar by Nandhi. Thirumoolar got inspiration by the 9 Aagamas and wrote Thirumanthiram in 9 chapters. They are :

1. Kaaranam - காரணம்
2. Kaamikam - காமிகம்
3. Veeram - வீரம்
4. Sindham - சிந்தம்
5. Vaathulam - வாதுளம்
6. Vyamalam - வியாமளம்
7. Kalotharam - காலோத்தரம்
8. Suprabedam - சுப்பிரபேதம்
9. Makutam - மகுடம்

Thirumanthiram consists of 195 subtitles in 3000 stanzas. Added to it, 128 are common citations and 28 are special citations and 7 are notable citations totaling 3163, all composed only in Tamil.

Thirumoolar is the chief of the Siddhars (direct disciple of Nandhi) and Agathiyar is not the chief as conceived by many authors. Thirumanthiram is the earliest known Siddhanthic philosophy based on Siva cult.

Thirumoolar's period is recorded in Tamil history with plenty of contradictions. But the authentic records say that Thirumoolar lived earlier to the period of Thiruvalluvar (75 B.C. to 36 A.D.) and Jesus

Christ. He is also known as Kailayathoru Siddhar. There is a story, which is also considered as history of Thirumoolar, says Thirumoolar visited the southern part of Indian continent from the Himalayas accompanied by Pathanjali and Vyakramar in his first visit Lord Siva held the cosmic dance in the presence of Pathanjali and Vyakramar at Chidambaram. At that time Thirumoolar was not known as Thirumoolar. When he visited the south from kailayam for the second time crossing podhigai he found a corpse of shephered, named moolan at Sathanur. Then he decided to perform the Koodu Vittu Koodu Payuthal, one of the Attama Siddhi and entered the corpse of moolan after preserving his own body under a Peepul tree. He composed Thirumanthiram, only after entering the Moolan's body, which is the reason for calling him as Thirumoolar. In another story we come to know that Thirumoolar concealed Thirumanthiram at the altar of Siva temple at Thiruvavaduthurai from where Thirumanthiram was unearthed by Thirugnanasambandar around 640 A.D. Many of Thirumoolar's stanzas inspired Thiruvalluvar to compose Thirukkural. Thirumoolar, after many years came to the place where he hid his body but could not find it there and then he opted to stay in the body of moolan till his end. That is the reason for attending the name Thirumoolan.

**Concept of Creation :**

Siva, the creator of the cosmos, is the Ultimate, who has no beginning or end like mortal beings. The universe emerged from the conjugation of All Pervasive Invisible Positive Force - **PARAPARAM** with the Energy Force - **PARASAKTHI** alias **PARAPARAI**. The outcome of the cosmic conjugation, **SIVA** emerged in communion with cosmic vibrations **'Ohm'** (natham) - **PARAI**. From Natham emerged Vindhu, the mighty jyothi, the visual and auditory perception. They are the first creation of the cosmic conjugation. While Siva bestows inner intelletual perception, Parasakthi emanates energy. From this combination comes desire (kama) desire to know the purpoe of creation, which is to perform the duties assigned to this body. The body enshrines the Uyir (aathma), which is the Nuclcus of the body and its creative activity.

Parasakthi, who is otherwise known as Thoomayari created kalan (intellectual activity). Then in that order, intellectual, physical and other earthly evolutions took place. From earthly evolution emerged 5 basic elements i.e. visumbu (space), vali (gaseous layer), thee (fire)neer(water), and nilam (earth) - which in turn procreates sound, perception, light, taste, and smell. The physical manifestation of this abstract creation is imbibed in the same order. Cosmos created 224 universes. The five elements interact with each other in various permutation and combination and ultimately earthly creations bear all characters of cosmos .

அண்டத்தில் உள்ளதே பிண்டம்
பிண்டத்தில் உள்ளதே அண்டம்
அண்டமும் பிண்டமும் ஒன்றே
அறிந்து தான் பார்க்கும் போதே

Meaning. what is found in the macro-cosm is found in the micro-cosm.

Padal enn; 383.

ஒருவன் ஒருத்தி விளையாடல் உற்றார்
இருவர் விளையாட்டும் எல்லாம் விளைக்கும்
பருவங்கள் தோறும் பயன் பலவான
திருவொன்றிற் செய்கை செகமுற்றுமாமே

## PROCREATION:

The embryo in the womb grows by the activation of Thee, THE VITAL ENERGY. It is futile to probe the gender, because the gender is determined by almighty. He designs the body of the male similar to the feature of his mother and the mind and activity like that of father. Ref. Thirumanthiram 461.

The vali(prana) THE VITAL LIFE FORCE crosses at suzumuna and if it chooses to travel through right nostril after inspiration during copulation, the foctus shall be male. On the other hand if the inspired vali travels through the left, the foctus shall be female.ref TM 461.

If the crossing does not take place, and vali enters through both nostrils the child thus formed shall be a hermaphrodite. There is also a message in this stanza that the semen need not pass through, if the male has self-control even at the time of copulation. Ref TM:462.

There are descriptions about the life span of the child born. Ref TM:463. VAARASARAM (The calendering of life force Vali) is defined as follows if the life force travels uniformly through all the five characters of vali, the child thus born will be a centurion. If it travels only through four characters, then the child born will be an octogenarian. If the life force is of low velocity, the issue born will be dwarf. If the force is longer than the defined length, the issue born will be a handicapped one. If there is interruption in the life force, the child will develop soliosis. This dictum applies only to male child. There are many other features like genetical disorders described in TM:470.

## VIDHU URPPANAM:

Vidhu is emanated from Thoomayar, from which Kundalini is evolved. I rom peruvah (BRHMANDAM), the following are generated.

1. Vamdhavam : This is the activity of the nine faceted Maya, Vamdhavam means emanation from vindhu. From the maya Ayan and eight other divine beings are created.
2. Karanangal : (organs)
3. Vaikari : (vibrations)

**Ref TM:1886**

This activation is otherwise the activity of Siva. Siva takes 25 uruvangal (characters)

| | | | |
|---|---|---|---|
| 1. | Sivakkozhunthu | - | சிவக்கொழுந்து |
| 2. | Ammaiyappan | - | அம்மையப்பன் |
| 3. | Otraithalar | - | ஒற்றைத்தாளர் |
| 4. | Echathalaivar | - | எச்சத்தலைவர் |
| 5. | Vidaiyoordhi | - | விடையூர்தி |
| 6. | Nandhivarathar | - | நந்திவரத்தார் |
| 7. | Koothapperuman | - | கூத்தப்பெருமான் |
| 8. | Kodunsinahthar | - | கொடும் சினத்தார் |
| 9. | Pennoru kootrannal | - | பெண்ணொரு கூற்றண்ணல் |
| 10. | Alamarselvar | - | ஆலமர் செல்வன் |
| 11. | Tiruneelakantar | - | திருநீலக்கண்டர் |
| 12. | Salantharan odukki | - | சலந்தரன் ஒடுக்கி |
| 13. | Aazhi Arulvon | - | ஆழி அருள்வோன் |
| 14. | Andhakasuran odukki | - | அந்தகாசுரன் ஒடுக்கி |
| 15. | Tripurar odukki | - | திரிபுரர் ஒடுக்கி |
| 16. | Gangaithangi | - | கங்கைதாங்கி |
| 17. | Vutruzhiyuthavi | - | ஊற்றுழியுதவி |
| 18. | Sivachudarkozhundhu | - | சிவச்சுடர் கொழுந்து |
| 19. | Meenodukki | - | மீனொடுக்கி |
| 20. | Amaiodukki | - | ஆமை ஒடுக்கி |
| 21. | Pandriodukki | - | பன்றி ஒடுக்கி |
| 22. | Aalariodukki | - | ஆலரி ஒடுக்கி |
| 23. | Mudhukelumbu Thookki | - | முதுகெலும்பு தூக்கி |
| 24. | Kalavairavan | - | காலவைரவன் |
| 25. | Balibhagavan | - | பலிபகவான் |

These are all the 25 characters of the creation with the defined formulation though it bears the names of Lord Siva.

Form Nadham four subdivisions are mentioned by Thirumoolar. They are again Vidhu, Paravindhu, Nadham, and Paranadham. It is to be understood Paravindhu is a manifestation of vindhu and paranadham is a manifestation of Nadam. While Nadham takes 24 different identities, Vindhu takes 25 different identities as described above. It is also explained by Thirumoolar that these 24 and 25 characters of Nadham and Vindhu respectively are the inner structure of Nadham and Vindhu, i.e. Sakthi and Siva.

## Chromosome theory:

George Gregor Mendel popularly referred as the father of genetics was the first to unravel the mystery of chromosomes and genes responsible for both phenotypic and genotype variability among species and race differences within the species. Although much research advances have been made in this field, the time old chromosome number theory remains same. In the case of male sex chromosomes, there are two varieties/types, X and Y exist, whereas in the case of female two numbers of the same type of chromosomes, i.e. 'XX' is present. Both chromosomes at the time of meiosis segregate and independently assort. Thus forms 'recessive cpitasis and 'dominant cpitasis'. Mendel explains this process in two thoeries, viz. Law of segregation and Law of independent assortment. The two laws put together is referred to as Mendelian law of inheritance. A clear parallel can be seen between the modern chromosome thoery and the tenets of Thirumoolar. Thirumoolar postulates the presence of extra number of chromosomes in the male than female. The extra number has to be read as type variability, i.e.XY in male than XX in female. We need to perfectly understand what Thirumoolar has said this discovery in his theory. It is astonishing to note how Thirumoolar got the insight of the chromosome type variability. The perfect matching in the number and types in the case of autosomal chromosomes can be seen in both theories.

## Conclusion:

All developments we have achieved in the modern medical science have their parallel reference in Siddha literature. Time has come to bridge the gap between the ancient science Siddha with the modern science. It is the duty of the scientists of our system to open the door for the modern scientists to see and understand how rich our system is and how all proven theories of modern science are found in Siddha science.

Paper presented at "The National Seminar on Siddha Medicine:R&D Institutions and Pharamaceuticals Industries," held on 9th & 10th, Dec.2002.

நன்றி
இந்திய மருத்துவத்துறை
தஞ்சை தமிழ்பல்கலைக்கழகம் தமிழ்நாடு



# வாழ்க மணமக்கள்



அனைத்து சன்மார்க்க சித்த வித்தியார்த்திகள் கழகத்தைச் சார்ந்த பிரம்மஸ்ரீ எம். இராமமூர்த்தி சுசிலாராமமூர்த்தி அவர்களின் குமாரத்தியான ஆர். சிவசங்கரிக்கும் மாரியநல்லூர் வி. பாண்டியன் அவர்களின் குமாரன் பி.ரமேஷ்க்கும் 10.3.2003 வியாழக்கிழமை காலை சென்னை, மில்லர்ஸ் சாலை, பி.டி.ராமகிருஷ்ணா திருமண மாளிகையில் திருக்கணடீசுவரம் சமரச சுத்தசன்மார்க்க சத்திய யோக சாலை நிர்வாகி பிரம்மஸ்ரீ சாது பா. சிவராமனார்முன்னிலையில் சன்மார்க்க செம்மல் உயிர் உரவு ஆசிரியர் கே.சங்கரையா அவர்கள் சன்மார்க்க முறைப்படி திருமணத்தை நடத்திவைத்தார்கள். அனைத்துசன்மார்க்க சித்த வித்தியார்த்திகள் கழகத்தின் அமைப்பளார் ஏ.ஜி. கணபதி அடிகளும் சித்த வித்தியார்த்தி சகோதர சகோதரிகளும், சன்மார்க்க அன்பர்களும் சித்த வைத்தியர்களும் திரளாக வருகை தந்து மணமக்களை வாழ்த்தினார்கள். திருமண அழைப்பில் வடலூர் வள்ளல் பெருமானார், வடகரை சிவானந்த பரமஹம்ஸர் ஆகிய சித்தர் பெருமக்களின் திருஉருவப் படத்துடன் அமைந்திருந்தது கண்டு அனைவரும் பாராட்டினார்கள் என்பது குறிப்பிடத்தக்கது.

நீரழிவு நோய்க்கு

# எளிய மூலிகை மருந்து

வெங்கடராச்சப்பர், சென்னை– 600 005.

நீரழிவு நோய்க்கு எளிமையான மூலிகை மருந்து ஒன்று உள்ளது. இதுவும் உணவே மருந்து உணவு என்ற ரீதியில் அமையப் பெற்றதே. அதில் நான்கு மூலிகைகளும் திரிகடுகு (சுக்கு, மிளகு, திப்பிலி) சூரணமும் சேர்ந்துள்ளன. பலருக்கு கொடுத்து சோதித்து பார்க்கப்பட்டது. நல்ல பலனை தருகிறது. மருந்துக் கலவையின் அளவு கீழே கொடுக்கப் பட்டுள்ளது.

(1) வில்வ இலை சூரணம் - 50 கிராம் (2) ஆவாரை இலை சூரணம் - 50 கிராம் (3) நாவல் இலை சூரணம், (4) திரிகடுகு சூரணம் - 50 கிராம் (5) சிறு குறிஞ்சான் இலை சூரணம் - 50 கிராம்.

மேற்கண்ட சூரணங்களை சித்த மருத்துவமுறைப்படி பாகப் படுத்தி பிறகு ஒன்றோடு ஒன்று நன்கு கலந்து ஒரு கண்ணாடி புட்டியில் பத்திரப் படுத்திக் கொள்ள வேண்டும். இதுவே நீரிழிவு நோய்கான எளிமையான மூலிகை மருந்து. இது நோயை உதிரத்தில் சர்க்கரையின் அளவை படிப் படியாக குறைத்து தேவையான அளவில் கட்டுப்படுத்துகிறது. ஒரு மாதத்திற்கான செலவு 30 ரூபாய்க்கு மேல் போகாது. இதை சாப்பிடும் முறையில் தான் இதன் செயலாற்றும் திறன் அடங்கி உள்ளது. கடைகளில் வாங்கும் மூலிகைப் பொடிகள் மூலம் மருந்து தயாரித்தால், சில சமயம் நல்ல பலனை தரும், சில சமயம் குறைந்த பலனை தரும். மூலிகைப் பொடி தயாரிப்பில் ஏற்படும் சில குறைபாடுகள் இதை யாவரும் மனதில் கொள்ள வேண்டும்.

**சாப்பிடும் அளவு :-**

சாப்பிடும் அளவு, வயது, உடல்வாகு, ரத்தத்தின் சர்க்கரையின் அளவு அவைகளைப் பொருத்து மாறுபடும். இதை ஓரளவுக்கு மருத்துவ அறிவு பெற்றவர்கள் யாவரும் முடிவு செய்ய முடியும்.

**சாப்பிடும் காலம்:-**

இதும் மேலே குறிப்பிடப் பட்டுள்ளது போல் மாறுபடும்.

**சாப்பிடும் நேரம் :-**

காலை எழுந்தவுடன் காலைக் கடன்களை முடித்த

பிறகு வெறும் வயிற்றில் சாப்பிட வேண்டும் 15 (அ) 30 நிமிடம் கழித்து கட்டுப்பாடான உணவு களை சாப்பிடலாம். ஒரே ஒரு வேளை போதுமானது.

**சாப்பிடும் முறைகள்:-**

1. ஒரு சிறிய கம்மாரு வெற்றிலையில் தேவையான மருந்தை வைத்து மடித்து மென்று சாப்பிட்டு பிறகு ஒரு டம்ளர் வெண்ணீர் அருந்த வேண்டும்.

மேற்கண்ட ஏதாவது ஒரு முறையில் மருந்து சாப்பிடும் போது படிப்படியாக ரத்தத்தில் சர்க்கரையின் அளவு கட்டுப் பாட்டிற்கு வரும். சரியான கட்டுப் பாட்டிற்கு வந்தவுடன் மருந்தை நிறுத்தி விடலாம். அலோபதி மருந்துகள் சாப்பிட்டுக் கொண்டிருப் பவர்கள் அந்த மருத்துகளை நிறுத்தக்கூடாது. நோய் கட்டுப் பாட்டிற்கு வந்தபின் அலோபதி மருந்துகளை நிறுத்திவிட்டு பிறகு மருந்தை நிறுத்தி விடலாம். (முற்றிய நிலையில் உள்ள நோயாளர் களுக்கு இந்த மருந்து பலன் தருவது சந்தேகமே).

**கவனிக்க வேண்டியவை**

1. ரத்தத்தில் சர்க்கரையின் அளவு ஒரு கட்டுப்பாட்டிற்குள் வந்து விட்டாலும் தொடர்ந்து ஓரளவுக்கு கட்டுப்பாடான உணவுகளையே சாப்பிட வேண டும்.

2. கட்டுப்பாடற்ற உணவின் காரணமாக மீண்டும் ரத்தத்தில் இருக்கும் சர்க்கரையை கட்டுப் படுத்துவதோடு உடலுக்கு ஒரு நல்ல ஆரோக்கியத்தையும் வழங்குகிறது. ரத்த அழுத்தம் கட்டுப்படுத்தப்படுகிறது. ரத்தம் சுத்தியாகிறது. முகத்தில் ஒரு தெளிவையும் உண்டாக்குகிறது. அதில் சேர்ந்திருக்கும் வில்வமும் திரிகடுகும் மிகச்சிறந்த மருந்துகள்.

இந்த மூலிகை மருந்து சர்க்கரை நோயை வேறொடு அறுத்து நிரந்தரமாக குணப் படுத்தும் மருந்தல்ல. ஆனாலும் இன்றைய சூழ்நிலையில் நல்ல மருந்து சர்க்கரை நோயை வேறொடு அறுத்து குணப் படுத்தக் கூடிய சித்த மருந்துகள் உண்டு. உலோக, பாஷாண மருந்துகளாக இருப்பதால் செய் முறையில் மிகுந்த எச்சரிக்கைத் தேவைப் படுகிறது. முறைப்படி செய்து முடித்தால் யாதொரு தீங்கும் செய்யாது. முறை தவறிவிட்டால் எல்லா தீங்கும் செய்யும். முறைப்படி செய்து முடித்த உலோக பாஷாண மருந்துகள் தகுதிவாய்ந்தவர்கள் துணையுடன் முடிக்கப் பெற்று விரைவில் அறிமுகம் செய்யப் படும்.

குறிப்பு :-

மாண்புமிகு முதலமைச்சர் அவர்கள் சர்க்கரை நோய்க்கு மருந்து கண்டு பிடிக்க வேண்டும் என்ற வேண்டுகோள் தினபூமி 08.01.2003 நாளிதழ் மூலம் கவனத்திற்கு வந்தது. முதலமைச்சர் அவர்களே வேண்டுகோள் விடுக்கும் போது சம்பந்தப்பட்ட அனைவரும், அதை ஏற்று செயல்பட வேண்டும் என்ற கருத்தில் சர்க்கரை நோய்க்கு மூலிகை மருந்து வெளியிடப் பட்டுள்ளது. இந்த மருந்தை விஞ்ஞானிகள் முறைப் படி சோதித்து சரியான ஆய்வறிக் கையை அளிக்கலாம். அம்மாதிரி ஆய்வறிக்கை வர வேற்க்கப்படுகிறது. பெருகி வரும் சர்க்கரை நோயாளிகளின் எண்ணிக்கையை மனதில் கொண்டே முதலமைச்சர் அவர்கள் வேண்டு கோள் விடுத்துள்ளனர். இதில் அடங்கியுள்ள மனித நேயத் தையும், மக்கள் மீது கொண்டுள்ள பாசத்தையும் பற்றையும் உணர்ந்து, ஏதோ என்னால் முடிந்த ஒரு சிறுபங்கு என்று சர்க்கரை நோய்க்கு எளிமையான மூலிகை மருந்து கூறப்பட் டுள்ளது. இதில் மனித ஆரோக் கியத்துக்கு தீங்கு ஏற்படுத்தக் கூடிய யாதொரு தன்மையையும் காணமுடியாது. இந்த நாட்டு மருந்து சிறு நீரகத்தை செய லிழக்க செய்து விடும் என்று கூறவே முடியாது. இந்த மருந்து பலருக்கு நல்ல பலன் கொடுத்துள்ளது. எனவே தான் வெளிப்படையாக எழுதப் பட்டுள்ளது.

''மக்கள் சேவையே மகேசன் சேவை''

---



# வாழ்க மணமக்கள்



தமிழ்மாநில சித்த வைத்திய சங்கத்தின் ஆலோசகர் மரு. பி.ஏ. சத்தியநாராயணன் அவர்களின் புதல்வி திரு.பி.எஸ். நந்தகுமார் அவர்களுக்கும் திரு. பி.கிருஷ்ணமூர்த்தியின் புதல்வி கே. மஞ்சுளா அவர்களுக்கும் 6.2.2003 அன்று திருப்தி கல்யாண மஹால் அம்பத்தூர் எஸ்டேட்டில்சிறப்பாக திருமண விழா நடைபெற்றது. தமிழ்மாநில சித்த வைத்திய சங்க தலைவர் பிரம்மஸ்ரீ ஏ.ஜி.கணபதி அடிகள், பொதுச் செயலாளர் மரு. எம்.பாஸ்கரன் அவர்கள் பொருளாளர் மரு. புலவர் விநாயகம் அவர்கள் செயற்குழு உறுப்பினர்கள், சங்க ஆசிரியர்கள் உறுப்பினர்கள் அனைவரும் கலந்துக் கொண்டு அன்புடன் வாழ்தினார்கள். மணமக்கள் எல்லா நலமும் வளமும் பெற்று வாழ சித்தர் செயலும் வாழ்த்துகிறது.

# தொலை – மருத்துவ ஹோமியோபதி கிசிச்சை / கோல்கத்தாவில் தொடக்கம்

தொலை – மருத்துவ (டெலிமெடிசின்) முறையில், ஹோமியோபதி மருத்துவ சிகிச்சை வழங்கும் திட்டம் மேற்கு வங்க மாநிலத்தின் மால்டா மாவட்டத்தில் ஞாயிற்றுக்கிழமை தொடங்கப்பட்டது. பி.பி.ஹோமியோபதி ஆராய்ச்சி அறக்கட்டளை இத்திட்டத்தைத் தொடங்கியுள்ளது.

தொலைதூர கிராமப்புறங்களில் இருக்கும் நோயாளிகள் பெருநகரங்களில் உள்ள மருத்துவமனைக்கு நேரடியாக வராமல், இன்டர்நெட் தொடர்பு மூலமாக, நிபுணர்களிடம் சிகிச்சை பெற வழிவகுப்பது ''டெலி மெடிசின்'' ஆகும்.

இத்திட்டத்தை அறக்கட்டளையின்தலைவரும் பிரபல ஹோமியோபதி மருத்துவருமான பி.பானர்ஜி தொடங்கி வைத்தார். ''மால்டா மாவட்டத்தில் உள்ள கிராம மக்கள் இதன்மூலம் பயன்பெற முடியும். அதன் வெற்றியைப் பொறுத்து, வேறு மாவட்டங்களுக்கு அத்திட்டம் விரிவு படுத்தப்படும் என்றார் பானர்ஜி.

அவரது அறக்கட்டளையின் மருத்துவமனையில் தினந் தோறும் 1200 பேர் சிகிச்சை பெற்றுச் செல்கின்றனர். ''டெலிமெடிசின்'' மூலம் மேலும் ஏராளமானனோருக்கு சிகிச்சை அளிக்க முடியும் என்றார் அவர்.

# சென்னை சித்த வித்தியார்த்திகள் அப்பியாச நிலைய அறக்கட்டளை நிகழ்ச்சி விவரம்

09.03.2003 ஞாயிறு அன்று காலை 10 மணிக்கு சென்னை, பெரம்பூர், 3, மீனாட்சி தெருவிலுள்ள அன்னதான சமாஜத்தில் சென்னை சித்த வித்தியார்த்திகள் அப்பியாச நிலைய அறக்கட்டளையின் தலைவர் **பிரம்மஸ்ரீ. ஏ.ஜி. கணபதி அடிகள்** தலைமை யில் நடைப் பெற்றது. நிலையச் செயலாளர் பிரம்மஸ்ரீ. கோதண்ட வேலு அனைவரையும் வரவேற்று உரை நிகழ்த்தினார் அனைவரையும் வரவேற்று அறங்காவலர் பிரம்மஸ்ரீ வே.மாணிக்கம் உரை நிகழ்தினார். நிலையத்தின் முக்கிய குறிக்கோளான சமாதிக்கு இடம் வாங்குவது பற்றி பேசப்பட்டது. செங்குன் றத்தை அடுத்த எருமை வெட்டி பாளையம் பஞ்சாயத்துத் தலைவர் உயர்திரு. சங்கரன் அவர்கள் தனது ஊரின் அனைத்து வார்டு உறுப்பினர் களையும் கலந்து கொண்டு பிறகு இடம் தருவதாக உறுதியளித்தார். பிறகு வழக்கம் போல் சித்த வேதம் வாசிக்கப் பட்டு விளக்கமளிக்கப் பட்டது. சதானந்தபுரம் பிரம்மஸ்ரீ. கோபால் சாமி, ஆரணி பிரம்மஸ்ரீ. ந.பத்ராசலம் மற்றும் புலர் உரை யாற்றினார்கள். துணைத் தலைவர் பிரம்மஸ்ரீ. ராஜ சுந்தரம் நன்றியுரை நல்கினார். பிறகு ஜெபம் சத்தினியுடன் கூட்டம் நிறைவுற்றது.

# ஊழ்வினை பேசிப் பயனில்லை

**பங்காரு அடிகளார் பிறந்த நாள் செய்தி**

ஊழ்வினை பேசிப் பொழுதைப் போக்காமல் அந்த வினையைக் கூட உடைத்தெரியும் ஆற்றல் தங்களுக்குள் இருப்பதை ஒவ்வொருவரும் உணர வேண்டும் என்று மேல்மருவத்தூர் ஆதிபராசக்தி சித்தர் பீட ஆன்மீக குரு பங்காரு அடிகளார் கூறியுள்ளார்.

தமது 63–வது பிறந்த நாளை யொட்டி அவர் வெளியிட்டுள்ள செய்தி:

அறிவை விதைத்தால்தான் வளர்ச்சி வரும். எனவே அறிவை வளர்த்துக் கொள்ளவேண்டும். எது வேண்டும்; எது நல்லது; எது கெட்டது; எது நீண்டு நிலைப்பது என்னும் அறிவை வளர்க்காமல் வேறு எதை வளர்த்தாலும் நினைத்த வளர்ச்சி கிடைக்காது. பால் இருக்குது. தயிர் ஆகுது. அதைக் கடைந்து மோராக்குகிறோம். அதை மேலும் மேலும் கடையக் கடைய வெண்ணை வருகிறது. அந்தவெண்ணையைச் சூடாக்கி உருக்கினால் நெய் ஆகிறது. பாலோட விலை என்ன? நெய்யோட விலைஎன்ன? பாலோட மதிப்பை விட நெய்யோட மதிப்பு அதிகம்தானே. விவேகமாக மாறுவ தில் வேகம் வேண்டும். ஐம்புலனை யும் ஒன்றாக்கி மனதைக் கடைந்து கடைந்து நெய் ஆக்கணும். அது தான் விலை மதிப்பற்றது.

விவேகத்தை வளர்க்கணும். உழைப்பை வளர்க்கணும். இயற்கையை வணங்கணும். பிற உயிர்கள் மேல் அன்பை, பாசத்தை, பண்பை வளர்த்துக் கணும். உழைப்பை விரிவாக்கணும். அதில்வரும் ஊதியத்தில் தர்மத்துக்குக் கண்டிப்பாக ஒதுக்கணும்.

மனத்தை அடக்கிப் பழகணும். சொல்லிலும் செயலிலும் விஷத்தைக் கக்காமல் தன்னைத் தெய்வம் காக்கும் என்னும் நம்பிக்கையோடு வாழும் போது அவனே மனிதரில் மாணிக்க மாகிறான்.

வாழ்க்கையில் இடர் நீக்கி, இன்னல் அழித்து நல்லது சொல்லி, நல்லது காட்டி, நல்லது ஊட்டி இளைஞர்களை வளர்க்க வேண்டும் என்றார்.

# எய்ட்ஸ் பாதிப்பால் ஆதரவற்றவர்களாக மாறும் 18 ஆயிரம் குழந்தைகள்

தமிழகத்தில் எய்ட்ஸ் பாதிப்பு ஏற்படும் பெற்றோர்களால் 18 ஆயிரம் குழந்தைகள் ஆதரவற்றவர்களாக ஆக்கப்பட்டுகின்றனர் என்று சுகாதாரப் பணிகள் துணை இயக்குநர் டாக்டர் க. குழந்தைசாமி தெரிவித்தார்.

கசம் எம்.பி.கே.ஜி. பண்ணையில் எய்ட்ஸ் நோயாளிகள் மற்றும் எய்ட்ஸ் நோயால் ஆதரவற்றவர்களாக ஆக்கப்படும் குழந்தைகளை அரவணைத்தல் குறித்து கருத்தரங்கம் செவ்வாய்க்கிழமை நடந்தது.

ஆட்சியர் ஆ.சி. மோகன்தாஸ் கருத்தரங்கைத் தொடங்கி வைத்துப் பேசியதாவது :

வேலூர் அரசு மருத்துவமனையில் கடந்த ஆண்டு மே மாதம் முதல் டிசம்பர் வரை 410 பேருக்கு இரத்தப் பரிசோதனை செய்ததில் 87 பேருக்கு எச்ஐவி பாசிட்டி இருப்பது தெரியவந்தது. சென்ற மாதத்தில் 84 பேருக்கு பரிசோத னை செய்ததில் 17 பேருக்கு எச்ஐவி பாசிடிவ் இருப்பது தெரியவந்துள்ளது.

தனிமனித ஒழுக்கம் மட்டுமே எய்ட்ஸ் உள்ளிட்ட அனைத்து வியாதிகளையும் தடுக்கக்கூடிய சிறந்த மருந்து. பாலியல் தொழிலில் ஈடுபட்டவர்கள் மற்றும் அரவானிகள் ஆகியோரின் மறுவாழ்வுக்கு பல திட்டங்கள் செயல்படுத்தப்படுகின்றன. அவர்களிடையே சுயஉதவிக் குழுக்களும் ஏற்படுத்தப்பட்டுள்ளன. இதனால் அவர்களுக்கு தன்னம்பிக்கை மற்றும் சமுதாயத்தில் நிலைத்து நிற்கும் ஆற்றல் கிடைத்துள்ளது.

எய்ட்ஸ் பாதித்த பெற்றோர்களின் குழந்தைகளை பள்ளிகளில் சேர்ப்பதற்குக் கூட தயங்குகின்றனர். அந்த குழந்தைகளை கட்டாயமாக பள்ளிகளில் சேர்த்துக் கொள்ள மாவட்ட நிர்வாகம் அறிவுறுத்தியுள்ளது என்றார் ஆட்சியர்.

சுகாதரத் துணை இயக்குநர் குழந்தைசாமி பேசியது :

எய்ட்ஸ் நோயாளிகளில் பெரும்பாலும் இளம்வயதினரே உள்ளனர். வரும் ஏப்ரல் மாதத்தில் இருந்து அனைத்து ஆரம்ப சுகாதார நிலையங்களில் எய்ட்ஸ் கண்டறியும் கருவிகள் மற்றும் சிகிச்சை முறைகள் நடைமுறைக்கு வருகின்றன என்றார் குழந்தைசாமி.

திருப்பத்தூர் சுகாதரப் பணிகள் துணை இயக்குநர் ஆர். நாராயணசாமி, பெண்கள் தனிச்சிறை கண்காணிப்பாளர் ஆர்.ராஜசௌந்தரி ஆகியோர் கலந்து கொண்டனர்.

******

# உதிரமேக வெட்டை நோய்க்கு சித்த மருத்துவம்

வெங்கடராச்சப்பர், 19/1, நல்லதம்பி தெரு, சென்னை - 600 005. போன் : 2844 3230

உதிரமேக வெட்டையென்று சித்தமருத்துவத்தில் அடையாளம் காணப்பட்ட நோயின் ஆங்கிலப் பெயர்தான் எய்ட்ஸ். இதைதான் தற்போது தமிழில் தேய்வு நோய் என்று குறிப்பிடுகிறார்கள். உதிரம் + மேகம் + வெட்டை என்பதின் கூட்டுப் பெயர்தான் உதிரமேக வெட்டை. உதிரம் என்றால் ரத்தம் என்று பொருள். மேகம் என்றால் பாலியல் மூலம் பெறப் படும் 21 வகை நோய்களுக்கு பொதுப் பெயர். வெட்டை யென்றால் பலமிழந்த, வலுவில்லாத, எதிர்க்கும் சக்தியில்லாத, என்று பொருள். உலோக மருந்துகள் செய்முறையில் வெட்டை யாக்கு தல் நைப்பாக்குதல் என்று இரு முறைகள் உண்டு. தகடு செய்து மருந்தாக மாற்றுவதற்கு நைப்பாக வேண்டும். பொடி செய்து மருந்து செய்வதற்கு வெட்டையாக்க வேண்டும். வெட்டையாக்கப் பட்ட ஒரு உலோகம் ஒரே ஒரு தட்டு தட்டினால் பொடிப் பொடி யாகும். அதாவது வலுமிக்க ஒரு உலோகம் தனது வலிமையையும் பலத்தையும் இழந்து எதிர்ப் பாற்றலை இழந்து விடுகிறது. எனவே வெட்டை நோய் என்பது காரணப் பெயராகும். இதனால் தான் உதிரமேக வெட்டையென்று சித்த மருத்துவத்தில் இனம் காணப்பட்டுள்ள நோய், எய்ட்ஸ் என்ற பெயரில் உலகத்தையே அச்சுறுத்திவரும் நோயை குறிக்கும் என ஆணித் தரமாக இங்கு குறிப்பிடப்படுகிறது.

இந்த பெயரில் மருந்து தேடி னால்தான் சித்த மருத்துவ நூல் களில் மருந்து கிடைக்கும். இல் லையேல் கிடைப்பது அரிது. பட்டமரம் போலாக்கும் வெட் டை மேகம் என்பார்கள். இப் போது இதன் காரணத்தை யாவரும் புரிந்து கொள்ளலாம். ''வெட்டை முத்தினால் கட்டை யிலே'' எனவும் கூறுவார்கள். இதைத்தான் இப்போது சொல்லிக் கொண்டிருக் கிறோம். முற்றிலும் குணமாக்கக் கூடிய மருந்து இல்லை, மரணம் தான் முடிவு என்று கூறிக் கொண்டிருக்கிறோம். வெட்டை முற்றினால் கட்டை யிலே என்ற சொல்லுக்கு, மரணம் தான் எனப் பொருள் கொள்ளலாம். கட்டை யென்ற மருந்தில் முற்றிய வெட்டை குணமாகும். எனவும் கூறலாம். இவ்வாறான உட் பொருளைக் கொண்ட பழ மொழிகள் தமிழில் ஏராளம். வெட்டை நோய்க்கு சந்தனக் கட்டை ஒரு மருந்து என்பது அனைவருக்கும் தெரியும். கட் டை யென்ற பெயரில் ஒரு புல் இருப்பது பலருக்கு தெரியாது. இந்த புல்லை உணவாகக் கொள்ளும் பசு அதிகப்பால் கொடுப்பதாக காட்பாடிக்கு அருகில் இருக்கும் வெப்பாலை என்ற கிராமத்தில் தெரிந்து

கொள்ள முடிந்தது இந்த புல் கூட அற்புத நோய் தீர்க்கும் ஆற்றல் உடையதாக இருக்கலாம். பலகை யென்ற பெயரில் மருந்துகள் உண்டு இந்த பலகையே கூட கட்டையாக இருக்கலாம். அல் லது கட்டை யென்ற பெயரி லேயே கூட மூல மருந்துகள் இருக்கலாம்.

எதையும் மேலோட்டமாக பார்க்காமல் கொஞ்சம் வினைய மாக பார்க்கப் பழகிக் கொள்ள வேண்டும், இதைத்தான்சித்தர்கள் தங்கள் நூல்களில் கூறுகின்றனர். அவ்வாறு வினையமாக பார்க்கப் பழகினால்தான், மறைப்பாக பரிபாடை(வை)யில் கூறப்பட் டுள்ள கருத்துக்கள் புரியும் எனவும் கூறியுள்ளார்கள். இதை உணர்ந்த வர்கள் வெகு சிலரே. பழச்சாறு, சுத்த சலம், முலைப்பால், தண்ணீர், நல்லசலம், வெண்கருநீர், அண்டநீர், எருக்கம்பால், தேன், அண்ட ஓடு, விந்து, நாதம், அண்டம், பிண்டம், பனிக்குடநீர், நஞ்சுக்கொடி போன்ற ஏராளமான சொற்கள் பரிபாடை சொற்களாக உபயோகப் படுத்தப்பட்டுள்ளன. இதற்கான வழக்கிலுள்ள அர்த்ததிலும் உபயோ கப்படுத்தப் பட்டுள்ளன. இதை தெரிந்து மருந்துகள் செய்தால்தான் சித்த மருந்துகள் நூல்களில் கூறியுள்ள நோய்களைத் தீர்க்கும். இல்லா விட்டால் ஏமாற்றம் தான் மிஞ்சும். மூலிகை களை வீரியிப் படுத்தும் முறை உண்டு. அவ்வாறு வீரியப் படுத்தினால் தான் மூலிகைகள் சித்த மருத்துவத்தில் கூறியுள்ளப் படி நோய்களை தீர்க்கும் இதற்கு கருப்பு நிறம் ஏற்படும் விதத்தில் வளர்க்க வேண்டும். இதற்கு சேராங்கொட்டை உபயோகித்து மூலிகைகளை கருப்பாக்கும் முறை சித்தர்களின் நூல்களில் காண முடியும். இதைப் பற்றி விருட்ச ஆயுர்வேதம் எழுதியுள்ள சுரபாலர் கீழ்கண்டவாறு எளிமை யாக கூறியுள்ளார் ''அறிவுடைய எவரும் செடிகளின் வேர் பக்கத்தில் ஒரு சேராங் கொட்டை யை புதைத்து வைப்பர்''. மூலிகை களை நோய் தாக்காமல் அதே சமயம் வீரியமாக்கும் ஒரு எளியமுறை இதுவேயாகும். கருப்பு மூலிகைகள் காடுகளில் மெத்த உண்டு என சித்தர்களால் கூறப்பட்டுள்ளது இதைப்பற்றி திருப்பத்தூர் சித்த மருத்துவர் திரு. எம். ராசமாணிக்கம் கீழ்க் கண்ட வாறு கூறினார். ''சேராங் கொட்டை மரத்தின் கீழ் கொட் டைகள் விழுந்து மக்கி எருவாகி போகும். அந்த இடங்களில் மூலிகைகள் முளைத்து மடிந்து பிறகு முளைத்து இவ்வாறு கருமை நிறமாகின்றன''. இதுவும் ஏற்புடைய ஒன்றே.

மூலிகைகளை கருப்பு நிறம் ஏற்றுவது என்பது சாத்தியம் தான் என்றாலும் சித்தர்கள் கூறும் கருநெல்லி, கருநொச்சி, கருநீலி போன்ற வகைகள் மூலிகைகளே அல்ல. கருநீலி என்பது அன்ன பேதிக்கு ஒரு பெயர். அதற்கு கொடி வேலி என்றும் பெயர். இதை குருநூல் 50க்கு சூத்திரம் 30ல் காணலாம் இதை இயற்றி

யவர் அகத்தியர் பெருமான் ஆகும். கருநெல்லி என்பது முப்பு வாகும். இந்த முப்புதான் சித்த மருத்துவத்தின் சீவன் இதுவே சிவனுமாகும். இந்த முப்பு இல்லாமல் கரும நோய்களை போக்க முடியாது என்ற வைத்தியம் பின்னெண்பதில் அகத்திய பெருமானால் கூறப் பட்டுள்ளது. இந்த முப்புவை தெரிந்துக் கொள்ள பரிபாடை (வை) நூல்களை படித்து தெளியவேண்டும். பிறகு தான் மருந்துகள் முழுமை பெறமுடியும் பொதுவாக கடுமையான நோய் களுக்கு ரசபாஷாண, உலோக மருந்துகளே சிபாரிசு செய்யப்படு கின்றன. செந்தூரங்கள், பஸ் பங்கள், சுண்ணங்கள் செய்வதில் பல பொது விதிகள் உண்டு சில நுட்பங்களும் உண்டு. இவை களை அகத்தியர் இயற்றி யுள்ள 12 காண்டங்களைக் கொண்ட 12,000 பாடல்களுக்கு, ஒவ்வொரு காண்டத்திற்கும் சூத்திரங்கள் உண்டு. இந்த சூத்திரங்களில் பொது விதிகளும் நுட்பங்களும் கூறப்பட்டுள்ளன. மூலிகைச் சாறுகளில் செந்தூரங்கள் செய்யும் போதும் துரிசு செந்தூரம் சேர்த்து சாறு பிழிந்து தான் மருந்துகளை அரைக்க வேண்டும். மூலிகை களில் பற்பங்கள் செய் வதற்கு துரிசு பற்பம் சேர்த்து சாருபிழிந்து தான் அரைக்க வேண்டும். மூலிகைகளில்ரசம் கட்ட வேண்டு மானால், கூறியுள்ள மூலிகை களில் துரிசு சுண்ணம் சேர்த்து சாறு பிழிந்துதான் சுருக்கு கொடுக்க வேண்டும். இதை வக்ார சூத்திரம் 100ல் காணலாம் இப்படிப்பட்ட பல நுட்பங்கள் ஏராளமான சூத்திரங்களில் அள்ளித் தெளிக்கப் பட்டுள்ளன. அகத்தியப் பெருமான் அருளி யுள்ள பரிபாடை திரட்டு 500 மற்றும் பரிபாடை 500 இவை களில் ஏராளமான நுட்பங்கள் கூறப்பட்டுள்ளன. பரிபாடை 500ல் முதல் 2 காண்டங்கள் இதுவரை அச்சிட வில்லை, அது கிடைக்க வில்லை, என்பது குறிப்பிடத் தக்கது.

அடுத்ததாக மூலிகை கடை சரக்குகள், காரசாரங்கள், உபர சங்கள், பாடாணங்கள், உலோ கங்கள், நவரத்தினங்கள் இவை களுக்கு சுத்தி முறைகள் உண்டு. சுத்தி முறைகளில் பரிபாடை மிகுதியாக உண்டு. இதை அறிந்து முறையாக செய்தால்தான் மருந்துகள் மருந்துகளாக இருக்கும். உதாரணத்திற்கு முலைப் பால் என்பது தாய்ப்பால் அல்ல. அது ஒரு செயநீராகும். பிறகு எப்படி சாதிலிங்கம் தாய்ப்பாலில் சுத்தியாகும். இதனால் தான் மருந்துகள் சரியாக வேலை செய்யவில்லை. இவைகளில் லாமல் எடைகள் அளவுகளிலும் கணித சிக்கல்கள் உண்டு. வகையொன்று தொகையொன்று, நேராய், சமனாக, போன்ற சொற்கள் உண்டு. இவைகளின் உட்பொருள்கள் தெரிந்து சேர்க்க வேண்டும். இதுவல்லாமல் இன்னும் பல குழப்பங்கள் சண்ட மாருத செந்தூரத்தில் உண்டு.

(தொடரும்)

# முப்பு தயாரித்து, ரசம் கட்டி உருக்கும் பயிற்சி வகுப்பு

சித்த மருத்துவ அன்பர்களே!

குரு மருந்தாகிய முப்பு கற்றுக்கொள்ள உங்களுக்கு ஓர் அரிய வாய்ப்பு. **திரு. மரு. இல. தேவசங்கர்** பரம்பரை சித்த மருத்துவர். இவர் தஞ்சையில் மருத்துவ தொழில் செய்து வருகின்றார். குருமருந்தின் மூலம் நவபாஷாணங்கள், இரசம், கெந்தகங்களை நெருப்புக்கு புகையாமல் கட்டுப்படுத்தி சிறந்த மருந்துகள் தயார் செய்து பல பெரிய வியாதிகளுக்கு மருத்துவம் செய்துவருகிறார். ஷெ அபூர்வமான அனுபவ வைத்திய முறைகள் இவர்களுடன் மறைந்துவிடக்கூடாது என்று இவை அனைத்தும் எல்லா சித்த மருத்துவர்களுக்கும் பயன்பட வேண்டும் அதன் மூலம் சித்த மருத்துவம் சிறப்படைய வேண்டும் என்று கருதி, இதுவரை இவர்கள் பரம்பரையில் இரகசியமாக செய்து வந்த மருத்துவ முப்பு செய்யும் முறை, பாஷாணங்கள் கட்டும் முறைகள், இரசம் உருக்கும் முறைகள், பெரும் மருந்துகளை எளிய முறையில் முடிக்கும் செய்முறைகளை எங்கள் வேண்டுகோளின்படி சித்த மருத்துவர்களுக்கு கற்றுத்தர முன்வந்துள்ளார். இச்செயல் சித்த மருத்துவம் சிறந்தோங்க ஒரு பெருந்தன்மையான தொண்டு. ஆகவே இவைகளை அனைத்து சித்த மருத்துவர்களும் தெரிந்து கொள்ள வேண்டியது மிகவும் அவசியம் மற்றும் பயன் உள்ளதாகும். இதன் ஆரம்ப நிலையாக மருத்துவ முப்பு தயாரித்து, அதன் மூலம் ரசத்தை கட்டி உருக்கும் பயிற்சி வகுப்பு சென்னையில் **மணிகண்டன் சித்த மற்றும் இயற்கை மருத்துவமனையில்** நடைப்பெற்று வருகின்றது. விருப்பமுள்ள சித்த மருத்துவர்கள் ஷெ பயிற்சி வகுப்பில் கலந்து கொண்டு பயனடையலாம். விவரங்களுக்கு மரு.ம. நடராஜன் அவர்களை தொடர்பு கொள்ளவும்.

''யாம் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்''

– திருமூலர்.

**மரு. ம. நடராஜன்** B.Com., D.S.S.M., D.H.M.S.S., R.M.P. (A.M.)., D.Y.T., D.Y.N.
மணிகண்டன் சித்த மற்றும் இயற்கை மருத்துவமனை
*11/297, டி.வி.எஸ். அவென்யூ,*
*அண்ணாநகர் மேற்கு விரிவாக்கம்*
*சென்னை– 600 101. போன் : 26546407*

டாக்டர் ஏ.மகேஸ்வரன் அவர்களுக்கு அகில கர்நாடக சங்க தலைவர் மரு. வெண்மதியன் அவர்கள் பொன்னாடை போர்த்துகிறார்கள்.

வெள்ளி விழா மாநாட்டில் ரோகிணி குளோபல் நிர்வாக இயக்குநர் டாக்டர் ஏ.மகேஸ்வரன் அவர்கள், மரு. மலர்க்கொடி ஆனந்தம் திருஉருவப்படத்தை திறந்து வைத்து சிறப்புரையாற்றுகிறார்கள்.

"Egmore RMS / 1 Partika Channel" Date of Posting Last 2 days of Every Month
Regd. No. TN/P.M.G.(CCR) / 871/03-05
SIDDHAR SEYAL
R.N. No. 30352/75
Licensed to post without prepayment Licence No.527
March 2003



Edited published and Owned by A.G. Ganapathe (alias) Sivananda G. Ganapathe Adigal, Office. No. 141, Arunachalam Street, Chintadripet, Chennai- 600 002. Ph. 28530711, 28585475 Cell : 9840257169
Printed at **IMAGE OFFSET PRINTERS,** Chennai - 2.